[Mr. Speaker] [5th September 1960

" (2) If the Speaker is of opinion that the motion is in order, he shall read the motion to the House and shall request those members who are in favour of leave being granted to rise in their places and if not less than twenty-one members rise accordingly, the Speaker shall intimate that leave is granted and that the motion will be taken on such day, not being more than ten days from the day on which leave is asked for, as he may appoint. If less than twenty-one members rise, the Speaker shall inform the member that he has not the leave of the House."

Therefore, now I shall read the motion once again and those hon. Members who support it should stand—

" This House disapproves the policy of the Ministry in the recent appointment of Government Pleader."

Four hon. Members rose in support of the motion.

Mr. SPEAKER : As only four hon. Members stood in favour of the motion, the House does not give leave to move the motion.

### V.—ADJOURNMENT MOTION TO DISCUSS THE IRREGULARITIES POINTED OUT BY THE HIGH COURT IN THE APPOINTMENT OF GOVERNMENT PLEADER.

Mr. SPEAKER : I have also received notice of an adjournment motion from the hon. Member, Sri M. Kalyanasundaram. It reads as follows :—

" That the proceedings of the House be adjourned for discussing the following matter of urgent public importance, viz.—

' the irregularities pointed out by the Madras High Court regarding the appointment of the present incumbent in the post of Government Pleader '."

The House already refused leave for the hon. Member, Sri P. S. Chinnadurai, to move, under rule 55 (1) (*b*), a motion relating to the same subject. Anyhow, before giving my decision on this adjournment motion, I should like to hear what the hon. Member, Sri Kalyanasundaram, has got to say in respect of this matter. He should make a brief speech.

**Sri M. KALYANASUNDARAM** : கனம் சபாநாயகர் அவர்களே, இப்போது சர்க்கார் வக்கீல் நியமித்ததைப்பற்றி உயர்நீதி மன்றம் தீர்ப்பு கூறியபோது பல குறைபாடுகள் கூறியிருக்கிறது. உயர்நீதி மன்ற நீதிபதிகளின் கருத்துக்களையோ அல்லது தீர்ப்பையோ சரியா இல்லையா என்பதைப் பற்றி நான் பேச விரும்பவில்லை. நீதிபதிகளின் கருத்துக்கு ரொம்ப மதிப்பு கொடுக்கக் கூடியவன் நான். அவர்களுடைய தீர்ப்பில் பல விஷயங்களில் கவனம் செலுத்தி சந்தேகக் கண்ணோடு, மந்திரி சபையையும், குறிப்பாக ஒரு மந்திரி தவறு செய்வதைப்பற்றியும் இதில் கண்டிருக்கிறது. இம்மாதிரி தவறுகளைக் கண்காணிக்கும் பொறுப்பு இந்த சபைக்கு மிகவும் அவசியம் உண்டு. நான் ஹைகோர்ட் தீர்ப்பைப்பற்றி கவலைப்படவில்லை. ஆனால் அதில் குறிப்பிட்டிருக்கிற விஷயங்களின் முழு விவரங்களைப்பற்றியும் தெரிந்து கொள்ள இந்த சபைக்கு உரிமை உண்டு. இதில் கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயம் என்னவென்றால் அட்வகேட் பெட்டிஷனரினுடைய கோரிக்கை நிராகரிக்கப்பட்டபோதிலும், அதில் கூறப்பட்டிருக்கிற

5th September 1960] [Sri M. Kalyanasundaram]

குற்றச்சாட்டுகளை ஒப்புக் கொண்டுவிட்டார்கள். மேலும் அந்தக் கேஸ் சம்பந்தப்பட்ட செலவு அவர்கள் கொடுக்கவேண்டுமென்று அந்த தீர்ப்பில் இல்லை. அப்படி கேட்காததற்குக் காரணம் என்ன சொன்னார்கள் என்றால், இது பொது மக்களின் கவனத்திற்குக் கொண்டு வந்து அம்பலப் படுத்தக்கூடிய ஒரு விஷயம் ஆனதினால் கோர்ட் செலவு பெட்டிஷனர்க ளால் சர்க்காருக்குக் கொடுக்க வேண்டியதில்லை என்று தீர்ப்பில் கூறப் பட்டிருக்கிறது. ஆகையால் நீதிபதிகள் அந்தத் தீர்ப்பில் கூறப்பட்டிருக்கிற முழு விவரங்களையும் இந்தச் சபைமுன் வைக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதுவும் அமைச்சரவையின், குறிப்பாக ஒரு அமைச் சரின் திரிகரணசுத்தியைப்பற்றி சந்தேகிக்கக்கூடிய வகையில் குறிப்பிட் டிருக்கிறது. ஆகையால் இந்த விஷயம் பூராவையும் விவாதிக்கவேண்டிய அவசியம் இந்தச் சபைக்கு ஏற்பட்டிருக்கிறது. ஆகையால்தான் இந்த ஒத்திவைப்புப் பிரேரேபணையைக் கொண்டு வந்திருக்கிறேன். இந்த சபை யில் இதை விவாதத்திற்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர்களே, இது ரொம்ப முக்கியமான விஷயம் என்பதைப்பற்றி நானும் உணர்ந் திருக்கிறேன். இந்தப் பிரச்னையை கனம் அங்கத்தினர்கள் எழுப்பியதற்கு அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட் டிருக்கிறேன். ஆனால் இதை ஒரு "அட்ஜோர்ன்மெண்ட் மோஷனாக" கொண்டுவந்து விவாதிக்க வேண்டுமா என்ற சந்தேகம் ஏற்படுகிறது. இதைப்பற்றிய முழு விவரம் தெரிவிக்க வேண்டுமென்று 41-வது பிரிவின் கீழ் நோட்டீஸ் கொடுத்தால், அப்போது இந்தச் சபை எல்லா விஷயங் களும் தெரிந்து கொள்ள முடியும். சற்று முன்புதான் கனம் ஸ்ரீ லாசர் அவர்கள் இது சம்பந்தமாக ஒரு உரிமைப் பிரச்னை எழுப்பியிருக்கிறார்கள். அவர்களுடைய நோக்கம் என்னவென்றால் எல்லா விஷயங்களையும் தெரிந்து கொண்டு, அதற்குப் பிறபாடுதான் தீர்ப்பு கூறவேண்டும் என்பது. தீர்ப்பு சரியானதாகவும் இருக்கலாம், தவறானதாகவும் இருக்கலாம். ஆனால் எல்லாவற்றையும் தெரிந்துகொண்டு பிறகு தீர்ப்பு கூறுவதற்கு ஒரு மதிப்பு இருக்கிறது. விஷயங்களைத் தெரிந்து கொள்ளாமல் ஊகித் துச் சொல்வதில் அதற்கு ஒரு மதிப்பு இருக்கிறது. அரசியலமைப்புச் சட் டத்தில் 163-வது ஷரத்தில் 3-வது பிரிவில்—

'The question whether any, and if so, what advice was tendered by Ministers to the Governor shall not be inquired into in any Court.'

என்று கூறப்பட்டிருக்கிறது. இந்த சர்க்கார் பிளீடர் நியமனம் எந்த காரணத்தினால், நோக்கத்தினால் செய்யப்பட்டது என்பது நீதிமன்ற விசா ரணைக்கு ஒரு Point at issue ஆக இருக்க முடியுமா, இல்லையா என் பதே ஒரு சிக்கலான விஷயம். இம்மாதிரி விசாரணையில் இந்த விஷயத் தைக் குறிப்பிட்டிருந்தது relevant point ஆக எடுத்துக் கொள்வதற் கில்லை. இதைத்தான் நம்முடைய சட்ட ஆலோசகரும் தெரிவித்தார்கள்.

அப்படி விசாரணைக்கு புறம்பாக இருக்கக்கூடிய ஒரு விஷயத்தைப் பொறுத்து, நாங்கள் எடுத்துக்கொண்டிருக்கக்கூடிய ரகசியமான பல விஷயங்களை நாங்கள் வைத்துக்கொண்டிருப்போம் என்பது நாங்கள் கொடுத்திருக்கக்கூடிய வாக்குறுதி. அதோடு 163 (3) கீழ் நாங்கள் என்ன சிபார்சு செய்தோம். எந்த சிபார்சின் அடிப்படையில் இந்த உத்தரவு பிறப்பிக்கப்பட்டது என்பதெல்லாம் அங்கு அவசியமில்லாதபோது நாங்க ளாகவே கொண்டுபோய் இதையெல்லாம் கொடுக்கலாமா என்பது ஒரு விஷயம். ஆகவே இந்த விஷயங்களை அங்கு சொல்ல வேண்டிய அவசிய மில்லை என்று நாங்கள் கருதினோம். அதையே சட்ட ஆலோசகர்களும் சொன்னார்கள். இதுபோன்ற விஷயங்கள் வரும்போது இதில் ஒன்றையும் ஒளித்து வைக்கக்கூடாது என்று கருதி ஒரு சமயம் நீதிபதி கேட்டால் எல்லா விதமான ரிக்கார்ட்களையும் அவரிடம் கொடுக்க அட்வகேட் ஜெனரலிடம் சொல்லி எல்லா பைல்களையும் அவர்களிடம் ஒப்புவித்து, இவைகளை நீங்கள் கையில் வைத்துக்கொண்டிருங்கள், இவைகளை கோர்ட் பார்வையிட

வேண்டுமென்று கேட்டால் அதை மறுக்கக்கூடாது, அப்படிச் "ப்ரிவிலேஜ்" க்ளெயிம் செய்ய உரிமையிருந்தாலும் அப்படிச் செய்ய வேண்டாம் என்று சொல்லி எல்லாரிக்கார்ட்களையும் அட்வகேட் ஜெனரலிடம் கொடுத்திருந்தோம். ஆனால் அவைகள் கேட்கப்படவில்லை. முழு விவரங்களையும் கேட்கவேண்டிய அவசியமில்லை, அப்படி அவசியம் இல்லாமல் இருந்தாலும் ஜட்ஜ் இவைகளை பரிசீலனை செய்யப் போகிறோம், இவை வேண்டும் என்று கேட்டால், ஒரு உரிமைப் பிரச்னை போல் பாவிக்காது கொடுத்து விடுங்கள் என்ற அடிப்படையில் அட்வகேட் ஜெனரலிடம் கொடுத்து வைத்திருந்தோம். அதுவும் கேட்கப்படவில்லை. இந்த ஜட்ஜ்மென்ட், எல்லா விஷயங்களையும் தெரிந்து அந்த அடிப்படையில் சொன்னதாக நான் ஏற்றுக்கொள்ள முடியாத நிலையில் இருக்கிறேன். ஜட்ஜ்மென்ட் காப்பி இப்பொழுது, என்னிடம் வந்திருக்கிறது. அதைப் பரிசீலனை செய்து, இதன் நுணுக்கங்கள் என்ன, இதன் மேல் என்ன நடவடிக்கைகள் எடுக்கலாம் என்பதையெல்லாம் ஆற அமர்ந்து படித்துப் பார்த்து, சட்ட ஆலோசகர்களையும் கலந்து அவர்கள் ஆலோசனைகளையும் கேட்டு எந்தவித நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. ஆனால் ஒன்று மட்டும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். நீதிமன்றம் ஒருபுறமிருக்க, இதுமாதிரி ஒரு தீர்ப்பு வெளிவந்த பிற்பாடு, இதில் இருக்கக்கூடிய முக்கிய விஷயங்களைத் தெரிந்துகொள்ள இந்த சட்ட சபைக்கு உரிமை இருக்கிறது என்ற காரணத்தினால் இதுபற்றி ஒரு விளக்கம் கொடுக்க வேண்டுமென்று நினைக்கிறோம். அப்படி கொடுக்கும்போது நாங்களும் வரம்புக்கு மீறி போய்விடக் கூடாது என்பதால் ஜட்ஜ்மெண்டைப் படித்துப் பார்த்து மற்ற சட்ட நுணுக்கங்களையும் படித்துப் பார்த்து எந்த அளவிற்கு இந்த சட்டசபை முன் விஷயங்களை வைக்க வேண்டுமென்று நாங்கள் முடிவு செய்யவேண்டியிருக்கிறது. நேற்றைக்கு முந்திய நாள் என் கைக்கு வந்தது அந்தத் தீர்ப்பு. நான் படிக்கிறது மட்டுமல்ல, ஒரு நகல் இருப்பதால், மற்றவர்களும் அதைப் படித்துப் பார்த்து அவர்கள் ஆலோசனையும் கேட்க வேண்டியிருக்கிறது. ஆகவேதான் சிறிது தாமதம் ஏற்படுகிறது, இங்கு விளக்கம் கொடுப்பதற்கு. 41-விதி பிரகாரம் அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய நோட்டீஸுக்கு, நாளையோ அல்லது அதற்கு மறுநாளோ, நான் இங்கிருந்து வெளி நாடுகளுக்கு புறப்படுவதற்கு முன் அந்த விளக்கத்தைக் கொடுக்க வேண்டும் என்பது சர்க்கார் கருத்து. அதை அவர்கள் ஒப்புக்கொண்டால் இந்த "அட்ஜோர்ன்மென்ட் மோஷன்" அவசியமில்லை என்பது என் கருத்து. விளக்கம் கொடுத்த பிற்பாடு பின் முடிவு செய்ய வேண்டியது இந்த சபையின் பொறுப்பாக இருக்கும். ஆகவே அதுவரையில் இந்த ஒத்திவைப்புப் பிரேரணை அவசியமில்லை என்பதே என் கருத்து. 41-விதி பிரகாரம் கொடுக்கப்பட்ட நோட்டீஸுக்கு எந்த நாள் விளக்கம் கொடுக்க முடியும் என்று பார்த்து சொல்கிறேன். ஆகவே, இதை வற்புறுத்தவேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

Mr. SPEAKER : I hope the hon. Member Sri M. Kalyanasundaram is not pressing his motion.

Sri M. KALYANASUNDARAM : 41-வது பிரிவின்படி நான் கொடுத்திருக்கக்கூடிய நோட்டீஸின்மீது அமைச்சர் அவர்கள் ஒரு அறிக்கை சமர்ப்பிப்பார்களானால் விவாதத்திற்கு சந்தர்ப்பம் இராது. அமைச்சர் அவர்கள் சொன்னார்கள், இந்த சபையின் அபிப்பிராயத்தை அதன் பிறகு தெரிவித்தால் நல்லதென்று. இந்த சபையின் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க எப்படி சந்தர்ப்பம் கொடுக்கப் போகிறார் என்று தெரிந்தால் இந்தப் பிரேரணைபற்றி ஒரு முடிவிற்கு வர சுலபமாயிருக்கும்.

The Hon. Sri C. SUBRAMANIAM : எப்படி என்பதுபற்றி பிஸினஸ் அட்வைஸரி கமிட்டியில் விவாதித்து எந்த சமயத்தில், எந்த ரூபத்தில் எடுத்துக்கொள்ளலாம் என்று முடிவு செய்யலாம். எனக்கு ஆட்சேபணையில்லை.

Sri M. KALYANASUNDARAM : அப்படியானால் நான் இந்தப் பிரேரேபணையை வற்புறுத்தவில்லை.